[8th September 1958

SRI N. R. THIAGARAJAN : இந்தச் சபையில் இப்படிப்பட்ட கேள்வியைப் போடலாமா ? அதற்கு கனம் அமைச்சர் பதில் சொல்லலாமா ? இந்த ஒழுங்குப் பிரச்னைக்குத் தீர்ப்புச் சொல்ல வேண்டுமென்று தங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : It depends on the merits of each case. எந்த எந்தக் கேள்வி எப்படி எப்படி இருக்கிறதோ அதற்குத் தகுந்தபடி தான் நான் தீர்ப்புக் கொடுக்க முடியும்.

* 86 *Q.*—SRI T. T. DANIEL AND SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have launched any scheme for pumping river water for irrigation purposes ;

(*b*) if so, in which districts and Block Development areas; and

(*c*) in which other places the Government propose to introduce the scheme?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) Six Public Works Department schemes in Tanjore district will be implemented by the Chief Engineer (Irrigation) of which one scheme is in Tiruthuraipundi Block Development area and the remaining five are in Vedaranyam Block Development area. Besides, one scheme each in Sivakasi and Virudhunagar Block Development areas in Ramanathapuram district and two schemes in Chidambaram Block Development area in South Arcot district will be implemented by the Agriculture Department.

(*c*) One scheme each is expected to be introduced in the following places by the Agriculture Department.

(*a*) Allur—Chidambaram Block Development area in South Arcot.

(*b*) Kalingapatti—Non-Block Development area in Tirunelveli district.

(*c*) Ooradiambalam—Tiruthuraipundi Block Development area in Tanjore.

(*d*) Perambakkam—Kadambathur Block Development area in Chingleput.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister, Sir, the conditions that have to exist before the introduction of these river pumping schemes and also the approximate minimum cost of each scheme?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, under this scheme water has to be lifted to higher level. This is a special feature of the scheme. The cost of scheme varies from one scheme to the other. The Agriculture Department is not quite enthusiastic about the scheme. But anyhow wherever the cost is economical and the ryots are keen about the scheme, it is being pursued.

SRI K. RAMACHANDRAN : இந்தத் திட்டம் இதுவரையிலும் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருப்பதைப் பொறுத்த வரையில், ஒரு பம்பு செட்டுக்கு எவ்வளவு செலவாகிறது ? சாதாரணமாக, ஒரு பம்பு செட்டின் மூலம் எத்தனை எக்கர்கள் விளைச்சலுக்குக் கொண்டுவரப் படுகின்றன ?

8th September 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சாதாரணமாக ஒரு ஏக்கருக்கு, ஒரு " கிராப் "-க்கு 25–30 ரூபாய் செலவாகிறது. நான் முன்பு கூறியபடி, திட்டம் அம்மாதிரிதான் மதிப்பிடப்பட்டிருக்கிறது. சர்க்காரின் ஸப்ஸிடி இல்லாவிட்டால் ஏக்கருக்கு 37½ ரூபாய் செலவாகிறது. ஒரு பம்பு செட்டின் மூலம் எத்தனை ஏக்கர் நிலம் பயிராகிறது என்பதுகூட அந்த அந்தத் திட்டத்திற்குத் தகுந்தபடி இருக்கிறது. ஒரு திட்டத்தில், ஒரு கிராமத்தில் " ரிவர் பம்பிங் ஸ்கீமினால் " 700 ஏக்கர் வரையில் பாசனம் அளிக்கப்பட்டிருக்கிறது.

SRI A. VEDARATHNAM : தென்டைார் பம்பிங் ஸ்கீம், வாயு மேடு கிராமத்தில் வளவனூறு பம்பிங் ஸ்கீம் முதலிய பாசனத் திட்டங்கள் இந்த ஆண்டில் எடுத்துக்கொள்ளப்படும் என்று கனம் அமைச்சர் தமது பட்ஜெட் பிரசங்கத்தில் கூறினாரே அவை இந்தத் திட்டத்தில் சேர்ந்திருக்கின்றனவா ? இல்லாவிட்டால், அவை எப்போது எடுத்துக்கொள்ளப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவை இந்தத் திட்டத்தில் சேர்ந்திருக்கின்றன. அதுபற்றிய பரிசீலனை முடிவானதும், ரயத்துக்களும் ஒப்பியவுடன், அவை எடுத்துக்கொள்ளப்படும்.

SRI K. ANBAZHAGAN : ஆற்று நீரை பம்பின் மூலம் பாய்ச்சுவதால், சில இடங்களில் மிகப் பெரிய தோட்டங்கள் வைத்திருப்பவர்களே அதனால் பயனடைகிறார்கள் என்றும், ஏழை எளியவர்களின் நிலங்களுக்கு ஆற்று நீர்ப் பாய்ச்சினால் தடைப்படுகின்றது என்றும் அரசாங்கத்திற்கு புகார் வந்திருக்கிறதா ? அப்படி புகார் வந்திருந்தால், இத் திட்டம் குறித்து மறு பரிசீலனை செய்ய அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : " ரிவர் பம்பிங் ஸ்கிமை" பொறுத்த வரையில், தோட்டங்களுக்கு ஆற்றுத் தண்ணீர் பாய்ச்சப்படுவதில்லை. இந்தத் திட்டத்தினால் நெல் போன்ற பயிர்களுக்குத் தான் தண்ணீர் பாய்ச்சப்படுகிறது. கனம் அங்கத்தினர் குறிப்பிட்டது போன்ற புகார் என்னிடம் வரவில்லை.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, are there not some lift irrigation schemes in the Cape District and the Shencottah Taluk?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. In that area there are a few lift irrigation schemes.

SRI S. M. ANNAMALAI : இந்தத் திட்டம் வட ஆற்காடு மாவட்டத்தில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதா ? இல்லையாயின் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தத் திட்டத்தை எங்கே சாத்தியப்படுகிறதோ அங்கேதான் ஆரம்பிக்க முடியும். இத் திட்டத்தை ஒரு இடத்தில் ஆரம்பிக்க வேண்டுமானால் முதலில் அங்கே ஆற்றில் தண்ணீர் மிகுதியாக இருக்கவேண்டும் ; இரண்டாவது, அந்தத் தண்ணீரை மேலே கொண்டுவந்து பாய்ச்சினால் அதனால் பயனடையக்கூடிய விளைச்சல் நிலம் இருக்கவேண்டும்.

SRI M. JAGANNATHAN : Sir, the Hon. Minister said that the river pumping scheme is a costly scheme. May I know whether special water rates are collected from ryots who are provided with irrigation facilities through such type of river pumping schemes?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : If charges are levied for water that is supplied by lift irrigation, I do not think, Sir, that there will be any special irrigation levies.

[8th September 1958

SRI K. R. VISWANATHAN : உடையார்பாளையம் தாலூகாவில் கொள்ளிடம் பக்கத்தில் இருப்பதால் "ரிவர் பம்பிங்" திட்டத்தின் மூலம் அங்கே ஆற்றுப் படுகையிலுள்ள நிலங்களுக்கு தண்ணீர் பாய்ச்ச முடியும் என்று பல திட்டங்கள் சர்க்காருக்கு சமர்ப்பிக்கப்பட்டன. அவைகளை சர்க்கார் பரிசீலித்ததா ? அவைகளை சர்க்கார் எவ்வளவு தூரம் நிறைவேற்றியிருக்கிறது ?

MR. SPEAKER : ஒவ்வொரு அங்கத்தினரும் சபையில் திடீரென்று ஒரு தனிக் கேள்வி போட்டால் கனம் அமைச்சரால் எவ்வாறு பதில் சொல்லமுடியும். இந்தக் கேள்விக்கு கனம் அமைச்சர் பதில் சொல்வாரானால் எனக்கு ஆட்சேபனை இல்லை.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போட்டால் விவரமாக பதில் சொல்லுகிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, may I know the stage at which the lift irrigation schemes in the Cape district and Shencottah taluk are?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I would like to have notice, Sir.

*Polytechnic*

* 87 *Q*.— SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு ஜில்லாவில் பாலிடெக்னிக் ஒன்று ஏற்படுத்தக் கோரி அதற்கான கண்டிஷன்படியெல்லாம் பணம் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட வட ஆற்காடு ஜில்லா பிளானிங் போர்டு கூட்டத்தின் தீர்மானம் வந்ததா ?

(ஆ) அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes.

(*b*) The question of opening a polytechnic in the North Arcot district is under consideration.

SRI M. P. SARATHI : வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள குடியாத்தத்திலிருக்கும் தனிப்பட்ட நபர் யாராவது பாலிடெக்னிக் அமைக்க முன்வந்தாரா ? அதற்கு சர்க்கார் அனுமதி கொடுத்திருக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆம். பாலிடெக்னிக் அமைக்க குடியாத்தத்திலிருந்து ஒருவர் முன்வந்திருக்கிறார். அவருடைய விண்ணப்பமும் சர்க்காரின் பரிசீலனையில் இருக்கிறது.

SRI A. A. RASHEED : Sir, since there is no technical college or school in North Arcot, will the Government kindly consider to expedite its proposal to open a polytechnic in North Arcot?

THE HON. SRI C. SUBRAMANIAM : In any event we cannot open this year. Therefore we have to consider this for the next year.

SRI T. KARIA GOUNDER : வட ஆற்காடு ஜில்லாவில் பாலிடெக்னிக்கை அமைக்க முன்வந்துள்ள தனி நபர் எப்போது மனுச் செய்துக் கொண்டார் ? அங்கே இவ்வருஷம் இல்லாவிட்டாலும் 1959–60-ம் வருஷத்திலாவது பாலிடெக்னிக்கை ஆரம்பிக்க சர்க்கார் முன்வருவார்களா ?